Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (O) P.P. 55



மட்டம்

பிடிக்காதவர்கள் மீது வேறு சிலரைத் தூண்டி விட்டு வேடிக்கை பார்ப்பவர்களை மிக மிக மட்டமானவர் என்பர் ஆன்றோர்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மக்கள்

கல்வியறிவும் சுயமரியாதை எண்ணமும் பகுத்தறிவுத் தன்மையுமே, தாழ்ந்து கிடக்கும் மக்களை உயர்த்தும்.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 3-8-1984 வெள்ளி ✲✲ வெளியீடு: 4-8-1984 சனி இதழ்: 288

## சென்னை விமான நிலைய வெடிகுண்டு விபத்து

# சாவு எண்ணிக்கை உயர்வு

## இறந்தவர்கள் 18 பேர்: 9 பேர் உயிர் ஊசல்

## விமான நிலையம் - மருத்துவமனைக்கு சென்று புரட்சித்தலைவர் விசாரணை

சென்னை, ஆக. 3- சென்னை விமான நிலையத்தில் வெடிகுண்டு வெடித்ததைத் தொடர்ந்து இறந்தவர்கள் எண்ணிக்கை 18 ஆக உயர்ந்துள்ளது. மேலும் 9பேர் நிலைமை கவலைக்கிடமாக உள்ளது. முதல்வர் புரட்சித்தலைவர் விமான நிலையத்திற்கும், மருத்துவமனைக்கும் சென்று பார்த்தார். காயமுற்றவர்களிடம் சம்பவம் பற்றி விசாரித்தார்.

நேற்று இரவு இலங்கை விமானம் ஒன்று சென்னை விமான நிலையத்தில் வந்து இறங்கியது.

பயணிகள் இறங்கி சுங்க சோதனை பகுதிக்கு வந்தனர்.

அப்போது விமான நிலைய அதிகாரிகளுக்கு தொலைபேசி செய்தி ஒன்று வந்தது.

இலங்கை விமானத்தைத் தகர்க்க வெடிகுண்டு வைத்திருப்பதாக தொலைபேசியில் பேசியவர் சொன்னார். பேசியவர் தனது பெயரை சொல்லவில்லை.

இந்த செய்தியைகேட்ட அதிகாரிகள் பரபரப்பு அடைந்து இலங்கை விமானத்தை. சோதனையிட்டார்கள் விமானத்தில் வந்த பார்சல்களை சோதனையிட்டனர். ஒரு பார்சல் தனியாகக் கிடந்தது அதை எடுத்து அதிகாரிகள் பிரித்த போது உள்ளே இருந்த வெடிகுண்டு பயங்கரமாக வெடித்தது

விமான நிலைய கட்டிடத்தின் ஒரு பகுதி நொறுங்கியது மின் இணைப்புத் துண்டித்து விமான நிலையம் இருளில் மூழ்கியது.

வெடிகுண்டு வெடித்து 18 பேர் இறந்தனர் பலர் காயமுற்றனர்.

விமான நிலையத்தில் கூடி இருந்தவர்களிடையே ஒரே கூக்குரலும் அழுகுரலுமாக இருந்தது.

### உடனடி சிகிச்சை

உடனடியாக மருத்துவமனைக்கும் காவல்துறைக்கும் தகவல்கள் பறந்தன.

ஆம்புலன்ஸ் வேன்கள் கொண்டுவரப்பட்டு படுகாயமுற்றவர்கள் தாம்பரம் ராணுவ மருத்துவமனை, அரசினர் பொது மருத்துவமனை, ராயப்பேட்டை மருத்துவமனை ஆகியவற்றுக்கு கொண்டு செல்லப்பட்டனர். அங்கு தீவிரசிகிச்சை அளிக்கப்படுகிறது.

வெடிகுண்டு விபத்து நடந்த சிறிது நேரத்தில் முதலில் 9 பேர் சடலம் கண்டுபிடிக்கப்பட்டது. மருத்துவமனைக்கு கொண்டு செல்லப்பட்டவர்களில் ஒருவர் இறந்தார். விமான நிலைய இடிபாடுகளை அகற்றிப் பார்க்கும் போது மேலும் சடலங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

### இறந்தவர்கள் விவரம்

இதுவரை 18 பேர் இறந்திருப்பதாக அதிகார பூர்வமான அறிவிப்பு கூறுகிறது.

பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட 13 பேரில் ஒருவர் எக்ஸ்ரே பிரிவுக்கு கொண்டு செல்லப்பட்ட போது தப்பி ஓடிவிட்டாராம். அவர் இலங்கையைச் சேர்ந்தவர் என்று தெரிகிறது. இதுபற்றி போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

மற்றும் 12 பேர் பொது மருத்துவமனையில் சிகிச்சைபெற்று வருகிறார்கள் இவர்களில் 4 ஆண்கள், 5 பெண்கள் ஆகியோர் உடல்நிலைகவலைக்கிடமாக உள்ளது.

ராயப்பேட்டை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட 10 பேரில் 8 பேர் சிகிச்சை பெற்றுத் திரும்பினர், மற்றும் 2 பேர் சிகிச்சை பெற்று வருகிறார்கள்.

இன்றுகாலை முதல்வர் புரட்சித்தலைவர் விமான நிலையத்திற்கும், பொது மருத்துவமனைக்கும் சென்றார். மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருபவர்களைப் பார்த்து பேசினார்.

பேர் பெண்கள்.

இந்த விபத்து பற்றி தமிழக ரகசிய போலீசார் வழக்குப் பதிவு செய்து தீவிர புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

இலங்கையிலிருந்துவந்த விமானத்தில் இந்த வெடிகுண்டு வந்திருப்பதால், விமானத்தில் யார் யார் வந்தார்கள் டிக்கெட் பதிவு செய்தும் யார் யார் பயணத்தை ரத்து செய்து விட்டார்கள். என்பதைக் கண்டறிய தமிழக ரகசிய போலீஸ் அதிகாரிகள், கொழும்புக்கு செல்வார்கள் என்று கூறப்படுகிறது.

விமான நிலையத்தில் வெடித்த வெடிகுண்டு டி. என். டி. ரக வெடிகுண்டு (டைம்பாம்) என்றும் சொல்லப்படுகிறது.

விபத்தை யொட்டி சென்னைக்கு வரவேண்டிய மற்றும் இங்கிருந்து போகவேண்டிய வெளிநாட்டு விமானங்கள் அனைத்தும் ரத்து செய்யப்பட்டன.

உள்நாட்டு விமான சர்வீஸ்கள் மட்டும் நடைபெறுகிறது,

வெடிகுண்டு வெடித்ததால் ஏற்பட்ட பொருள் சேதம் சுமார் ரூ 5 லட்சம் இருக்கும் என்று கூறப்படுகிறது.

## இன்றும் மர்மபோன்:

# மேலும் ஒரு வெடி குண்டா?

இன்று காலை 9.30 மணியளவில் மீனம்பாக்கம் விமான நிலையத்திற்கு ஒரு டெலிபோன் கால் வந்தது விமான நிலையத்தில் மேலும் ஒரு வெடி குண்டு இருப்பதாகவும் பிற்பகல் 3 மணி அளவில் அந்த குண்டு வெடிக்கும் என்று டெலிபோனில் பேசிய அநாமதேயக்குரல் கூறியது. இந்த தகலைத் தொடர்ந்து விமானநிலைய கார்கோ வளாகத்திலுள்ள அனைத்து ஊழியர்களும் பாதுகாப்பு கருதி வெளியேற்றப்பட்டனர்.

# ராணுவ மந்திரி வருகிறார்

விபத்துக்குக் காரணம் என்ன? வெடி குண்டை கொண்டு வந்து அந்த இடத்தில் வைத்தது யார்? என்பது பற்றி தீவிர புலன் விசாரணை நடந்து வருகிறது.

மத்திய புலனாய்வுத் துறையினர் இந்த விசாரணையில் ஈடுபடத்தொடங்கி விட்டனர்.

விபத்துதன்மை பற்றியும், விபத்து நேர்ந்த விதம் பற்றியும் நேரில் பார்வையிட புதியமத்திய ராணுவ அமைச்சர் எஸ்.பி.சவான் வருகிறார்.

உலகிலேயே விமான நிலையத்தில் வெடிகுண்டு வெடித்து இவ்வளவுபெரிய அளவில் உயிரிழப்பு ஏற்பட வைத்தது மீனம்பாக்கத்தில் தான் என்று கூறப்படுகிறது.

வெடிகுண்டு பெட்டி வந்த விதம் பற்றி கஸ்டம்ஸ் அதிகாரிகளிடம் தீவிர விசாரணை நடந்து வருகிறது.

# துபாய் பெண்கள் பாதிப்பா?

விமான நிலையத்தில் காத்திருந்தவர்களும் இந்த விபத்தில் பாதித்து இருக்கக்கூடும் என்று கூறப்படுகிறது.

துபாய்போகும்விமானம் ஒன்று நள்ளிரவு 2-30 மணிக்கு செல்ல வேண்டியிருந்ததாம் அந்த விமானத்தில் செல்ல பல பெண்கள் காத்திருந்ததாகசொல்லப்படுகிறது

இவர்களில் சிலர் பாதிக்கப்பட்டு இருக்கக்கூடும் என்று சொல்லப்படுகிறது

✲✲

# அண்ணாநகர் தொகுதி தேர்தல் வழக்கு தள்ளி வைப்பு

சென்னை, ஆக- 3 அண்ணா நகர் தொகுதி இடைத்தேர்தலில் கள்ள ஒட்டு மூலம் தி.மு.க. வெற்றி பெற்றதாகக்கூறி அந்ததேர்தலைசெல்லாது என்று அறிவிக்குமாறு சென்னை உயர்நீதிமன்றத்தில் அண்ணாநகர் தொகுதி வாக்காளர்கள் சிலர் வழக்குத் தொடர்ந்துள்ளனர். அந்த வழக்கு நீதிபதி டேவிட் அண்ணாசாமி முன் இன்று வந்தது. விசாரணையை 2 வாரங்களுக்கு நீதிபதி தள்ளி வைத்தார்.

இந்த வழக்கில் மனுதாரர்கள் சார்பில்வழக்குரைஞர்கள் கற்பக விநாயகம், பத்ம நாபன், உசேன். ஜெயகுமார், நாகராஜன் ரத்தினவேலு, பூபாலன் ஆகியோர் ஆஜரானார்கள்.

# லாட்டரி முடிவுகள்

(4-ம் பக்கம்)

# காயம் அடைந்தவர்கட்கு சிகிச்சை அளிக்க விசேஷ டாக்டர்கள் குழு

## சென்னை பொது மருத்துவமனையில் தீவிர சிகிச்சை

சென்னை, ஆக. 3. சென்னை விமான நிலைய விபத்தில் காயம் அடைந்தவர்களுக்கு சென்னை பொது மருத்துவமனையில் டாக்டர்கள் தீவிர சிகிச்சை அளித்து வருகிறார்கள்.

சென்னைமீனம்பாக்கம் விமான நிலையத்தில் இலங்கை விமானத்தில் இருந்த வந்ததாக கூறப்படும்

பார்சல் ஒன்றுவெடித்ததால் பயங்கர விபத்து ஏற்பட்டதுதெரிந்ததே.

இந்த விபத்தில் சிக்கியவர்கள் சென்னை பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

சென்னை பொதுமருத்துவமனையில், 1-வது வார்டு, 3-வது வார்டு, 23-வது வார்டு ஆகிய வார்டுகளில் காயம் அடைந்தவர்கள் அனுமதிக்கப்பட்டுள்ளனர்

இவர்களுக்கு டாக்டர்கள் குழுவினர் தீவிர சிகிச்சை அளித்து வருகிறார்கள்.

மருத்துவமனையில் அனுமதிக்கப் பட்டுள்ளவர்கள் விவரம் வருமாறு:

சுப்பிரமணி (வயது-35) இவர் ஸ்டேட் பாங்கியில் ஆபீசராக பணியாற்றி வந்தவர்.

விஸ்வாஸ், விமான நிலைய அதிகாரி நசுமுதீன் (33) சப்ருதின (37 உசேன் (20) சுபத்திரா (வயது 25) இவர் இலங்கையைச்சேர்ந்தவர். சாமாலின் (வயது 24) ஹேமாவதி (வயது 25) இவர் இலங்கையைச் சேர்ந்தவர், ஏகநாயகா (வயது 21) இலங்கையைச் சேர்ந்தவர். ஐரீஸ் பெரைரா பெண் (வயது 25) இவர்களைத் தவிர அடையாளம் கண்டு பிடிக்கப்படாத ஒருவர் இந்த 13 பேர்களுக்கும் தீவிர சிகிச்சைவிசேஷடாக்டர்கள் குழுவினரால் அளிக்கப்பட்டு வருகிறது.

இலங்கையைச் சேர்ந்த அம்மணிஎன்றகுணதிலகா (வயது 30) ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு இருந்தார்.

### 11 உடல்கள்

சென்னை பொது மருத்துவமனையில் பிணவறையில் இந்த விபத்தில் இறந்தவர்களின் 11 உடல்கள் உள்ளன.

விபத்தில் இறந்தவர்களில் விமான நிலைய அதிகாரி ஜேசுதாசும் ஒருவராவார்.

### கூட்டம்

விபத்தில் காயமடைந்து காயமடைந்து சிகிச்சை பெறுபவர்களை பார்க்கவும், இறந்தவர்கள் யார் என்பதைக் கண்டறியவும் ஏராளமானவர்கள் ஆஸ்பத்திரி வாயிலில் கூடியுள்ளனர்.

இறந்தவர்களில் மற்றொருவர் தாமோதரன். இவர் விமான நிலைய கஸ்டம்ஸ் அலுவலகத்தில் வேலை பார்த்து வந்தவர்.

காயம் அடைந்தவர்களுக்கு ஆறுதல் கூற ஆஸ்பத்திரிக்கு வந்த கவர்னர் குரானாவின் காலில் விழுந்து தாமோதரனின் சகோதரர் நரசிம்மன் கதறி அழுதது பார்க்க பரிதாபமாக இருந்தது.

சென்னைராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் 2 பேர் அனுமதிக்கப்பட்டுள்ளனர்

அதில் ராம் நாராயண் என்பவர் விசாகப்பட்டினத்தைச் சேர்ந்தவர் மற்றொருவர் யார் என்பது தெரியவில்லை.

இருவருக்கும் தொடர்ந்து சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது,

### பாதுகாப்பு

விமான நிலையத்தில்ஏற்பட்ட வெடி விபத்தில் காயம் அடைந்தவர்கள் சென்னை பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவருவது தெரிந்ததே.

இதையடுத்து சென்னை பொதுமருத்துவமனை பகுதியில் பலத்த பாதுகாப்புபோடப்பட்டுள்ளது

# இலங்கை குண்டா?

விமான நிலையத்தில் அதிகாரிகளை சந்தித்து விபத்துபற்றி விசாரித்தார் அரசு தலைமைச்செயலாளர் சொக்கலிங்கமும் சென்றார்.

பொது மருத்துவமனைக்கு ஆளுநர் குரானா மேலவைத் தலைவர் ம. பொ. சி அமைச்சர் டாக்டர் அண்டே ஆகியோர் சென்று சிகிச்சை பெறுபவர்கலைளப் பார்த்தார்கள்.

இறந்த 18 பேரில் 5

# நாடாளு மன்றத்தில் அறிக்கை

இன்று நாடாளுமன்றம் கூடியதும் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் ஏற்பட்ட குண்டு வெடிப்பு சாவு பற்றி உறுப்பினர் ஒருவர் கேட்டார்.

அதற்கு சபாநாயகர் பலராம் ஜாக்கர் பதில் அளிக்கையில் இந்தவிபத்து பற்றி சம்பந்தப் பட்ட அமைச்சர் விசாரணைக்கு பிறகு அறிக்கை தாக்கல் செய்வார்என்றுகூறினார்.

# இலங்கை விமானங்கள் ரத்து

கொழும்பு, ஆக. 3- சென்னைவிமான நிலையத்தில் குண்டுவெடித்ததை அடுத்து இந்தியாவுக்குச் செல்லும் எல்லா விமான சர்விஸ்களையும் இலங்கை அரசு ரத்து செய்துள்ளதாக அறிவித்துள்ளது.

கொழும்பு விமான நிலையததில் பாதுகாப்பு தீவிர படுத்தப்பட்டுள்ளது.



# என். வி. என். நினைவு நாள்

தோற்றம்: 12.11.1911 - மறைவு: 3.8.1975

நலிந்தோர் நலன் காக்க
நாளெல்லாம் உழைத்த நல்லவரே
தன்னலமற்ற தொண்டினால்
தன்மான இயக்க தளபதியானவரே
அண்ணாவின் அன்பு தம்பியாய்
ஆனவரே
புரட்சித்தலைவரின் இதயத்தில்
கொலுவிருக்கும் புனிதபண்பாளரே
நீவிர்மறைந்து ஆண்டுகள் 9 ஆயினும்
நின் தியாகத்தை நெஞ்சில் தேக்கி
நின் நினைவுகளோடு வாழுகிறோம்

சென்னை-14 இவண்;
3-8-84 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

# மாங்கனி மண்ணில் இதயக்கனி பெற்ற உற்சாக வரவேற்பு

சேலம், ஆக. 3- சேலம் மாவட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் கடந்த 30, 31, 1-ந் தேதிகளில் பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கேற்று பல கோடி ரூபாய்க்கான பல திட்டங்களைத் தொடங்கி வைத்தார். இதுவரை எத்தனையோ ஆட்சிகள் வந்தும் சேலம் நகருக்கு நல்ல ஒரு பேருந்து நிலையம் கூட இல்லாத நிலை இருந்தது. சேலம் மாவட்ட மக்களின் நீண்ட நாள் கோரிக்கையான நவீன பேருந்து நிலையத்திற்கான கால்கோளை முதல்வர் புரட்சித்தலைவர் நாட்டினார். அச்சுவானேரியில் நடைபெற்ற இந்த கால்கோல் விழா நிகழ்ச்சிகளுக்கு ஆண்களும், பெண்களும் பல்லாயிரக்கணக்கில் வந்திருந்தனர்.

அன்று (30-ந் தேதி) இரவு பெருந்தலைவர் காமராசர், விஜயராகவாச்சாரியார் சிலைகளை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்துவைத்தார். மாலை முதல் மழை தூறத் தொடங்கியது. மழையையும் பொருட்படுத்தாது லட்சக்கணக்கான மக்கள் முதல்வரின் பொன்னுரை கேட்க காத்திருந்தனர். இந்தக் கூட்டம் முடிய நள்ளிரவுக்கு மேல ஆயிற்று நள்ளிரவு நேரத்திலும ஏராளமான பெண்கள் கைக் குழந்தையுடன் வந்து தமிழ்குலத் தலைவன் புரட்சித்தலைவரின் பேச்சைக் கேட்டனர்.

## வழிநெடுக கூட்டம்

31-ந் தேதி காலை சேலம் பாலிடெக்னிக் துவக்க விழா நடைபெற்றது அஸ்தம்பட்டியிலிருந்து விழா நடைபெற்ற அம்மா பேட்டை வரை பல்லாயிரக்கணக்கான மக்கள் வழிநெடுக கூடியிருந்து புரட்சித்தலைவரை வரவேற்றனர். ஏறத்தாழ 6 கி. மீட்டர் தூரத்திற்கு ஆண்களும் பெண்களும் வழிநெடுக கூடியிருந்து புரட்சித்தலைவரை வரவேற்றனர். இந்த விழாவிற்கு பல்லாயிரக்கணக்கான பெண்கள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. மாலையில் ஆயக்காடு பள்ளி பாளையத்தில் வீட்டுவசதி வாரியத்தின் சார்பில் கட்டப்பட்ட 1248 வீடுகளை முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கி வைத்தார்.

நலிந்த பிரிவினருக்கான அரசு உதவிகளையும் முதல்வர் இந்த விழாவில் வழங்கினார். அஸ்தம பட்டியிலிருந்து பள்ளிபாளையம் செல்லும் வழி நெடுக உள்ள ஊர்எல்லையில் பெருந்திரளான மக்கள் கூடியிருந்து சத்துணவு தந்த தளநாயகர் வாழ்க ஏழைகளின் இதய தெய்வம் புரட்சித்தலைவர் வாழ்க என்ற வாழ்த்து முழக்கங்களை எழுப்பி வரவேற்றனர். இநத விழாவிற்கு பல்லாயிரக்கணக்கான பெண்கள வநதனர்.

## தாய்மார்கள் தந்த மனு

விழாவில் முதல்வரிடம் பல தாய்மார்கள் மனு கொடுத்தனர். விழா முடிந்து முதல்வர் சேலம் திரும்புகையில் நள்ளிரவுக்கு மேல் ஆயிற்று அந்த நள்ளிரவுப் பொழுதிலும் ஆண்களும், பெண்களும் பல்லாயிரக்கணக்கில் கூடியிருந்து முதல்வரை வரவேற்றது குறிப்பிடத் தக்கது.

1-ந் தேதி காலை சேலம் கூட்டுறவு நூற்பாலையில் "பி" பிரிவை முதல்வர் தொடங்கி வைத்தார். இந்த விழாவிற்கும் மக்கள் பெருந்திரளாக வந்திருந்தனர். தொழிலாளத் தோழர்கள் பல்லாயிரக்கணக்கில் கூடியிருந்து தொழிலாளர்களின் தோழன் புரட்சித்தலைவர் வாழ்க என்பன போன்ற வாழ்த்து முழக்கங்களை எழுப்பி வரவேற்றனர். மாலையில பால் பண்ணைத் துவக்க விழா நடந்தது. அஸ்தம்பட்டியிலிருந்து தளவாய் பட்டி வரை லட்சக்கணக்கான மக்கள் கூடியிருநது புரட்சித்தலைவரை வரவேற்றனர்.

## மாபெரும் பேரணி

பல லட்சம் கழகத் தோழர்கள் பங்கேற்ற பிருமாண்டமான பேரணியும் நடைபெற்றது 'இப்படை தோற்கின் எப்படை வெல்லும்' எனும் வகையில் புரட்சித்தலைவரின் அன்புத் தம்பிகள் நடத்திய பேரணி சேலத்தையே உலுக்குவதாக இருந்தது.

பால் பண்ணைத்துவக்க விழாவிற்கு பல லட்சம் மக்கள் வந்திருந்தனர். மாநாடோ எனவியக்கும் வண்ணம் லட்சக் கணக்கில் மக்கள திரண்டு புரட்சித்தலைவரின் பொன்னுரை கேட்டனர். விவசாயப் பெருங்குடி மக்கள் இந்த விழாவிற்கு பெருந்திரளாக வந்திருந்தனர்.

சேலத்தில் 3 நாட்கள் நடைபெற்ற நிகழ்ச்சிகளிலும் பல லட்சம் மக்கள் கூடியிருந்து புரட்சித் தலைவரின் பொன்னுரை கேட்டனர். மாங்கனி விளையும் பூமி என்றும் இதயக்கனியின் பக்கமே என்பதை பறைசாற்றுவதாக ஒவ்வொரு நிகழ்ச்சியும் அமைந்தது.

## உ.பி முதல்வராக திவாரி தேர்வு

லக்னோ, ஆக. 3— மத்திய அமைச்சராக இருந்த திவாரி உத்திரப் பிரதேச முதல்வர் ஆகினார்.

உ. பி. சட்டமன்ற காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் தலைவராக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## 37வது வட்ட ஆலோசனைகூட்டம்

சென்னை, ஆக. 3-. சென்னை, புரசைப்பகுதி 37-வதுவட்ட சார்புமன்ற நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம், நாளை 4-ந் தேதிமாலை 7மணி அளவில் அவைத் தலைவர் அ. தாமோதரன் தலைமையில் வெள்ளாளத் தெருவில் உள்ள பேரறிஞர் அண்ணா படிப்பகத்தில நடைபெறுகிறது.

கூட்டத்தில்வட்டசார்பு மன்ற நிர்வாகிகள் அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு வட்டச் செயலாளர் மா. சா. எத்திராசன் கேட்டுக் கொண்டுள்ளார்.

## உணவுக் கிடங்குகள் கட்ட உலக வங்கி உதவி

### அமைச்சர் காளிமுத்து தகவல்

மதுரை ஆக. 3- உலகவங்கி உதவியோடு தமிழ்நாட்டில் உணவுக் கிடங்குகள் கட்ட திட்டமிடப்பட்டு இருப்பதாக அமைச்சர் காளிமுத்து கூறினார்.

மதுரையில் ஒரு வங்கியின் கிளையை அமைச்சர் காளிமுத்து நேற்று திறந்து வைத்தார்.

அப்போது அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:-

தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் விவசாயிகளுக்கு மேலும் உதவிகளைச் செய்ய முன்வரவேண்டும்

தக்க நேரத்தில் இந்த உதவிகளைச் செய்ய வேண்டும்

விவசாயிகளுக்கு வங்கிகள் உதவுவதன் மூலம் விவசாயிகள் தங்கள் உற்பத்திப்பொருளை சேமித்து வைததுக் கொள்ள முடியும்.

பணவசதி இல்லாததால் விவசாயிகள் குறைந்த விலைக்கு விற்கும் நிலை இருந்து வருகிறது.

வங்கிகள் இதற்கு உதவினால் விவசாயிகள தங்கள் விளைபொருள்களை நல்ல விலைக்கு விற்கமுடியும்.

இந்த ஆண்டு தமிழ்நாட்டில் ஒருகோடி டன் உணவு தானியம் உற்பத்தி செய்ய குறிஅளவு நிர்ணயிக்கப்பட்டு இருக்கிறது.

விளையும் உணவு தானியங்களை சேமித்து வைக்க கிடங்கு வசதி போதியநிலையில் இல்லை.

ஆகவே உலகவங்கி உதவியோடு உணவுக் கிடங்குகள் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

---

கோவை மாநகர் மாவட்டம்

## மதுக்கரை ஒன்றிய கழக செயல் வீரர்கள் கூட்டம்

இடம்:- ஆர் எச், ஆர் பில்டிங் கோவை

நாள்:- 5-8-84, ஞாயிறு காலை 10 மணி

தலைவர்:- மதுக்கரை கோவிந்தராஜ் பி. ஏ.

முன்னிலை:- கோவைத்தம்பி எல். எல். ஏ (மாவட்ட அமைப்பாளர்)

சிறப்புரை:- மாண்புமிகு செ. அரங்கநாயகம் (கல்வி அமைச்சர்)

திருப்பூர் இரா. மணிமாறன் எம்எல்ஏ (அரசு கொறடா)

ஒவ்வொரு கிளைக் கழக சார்புமன்ற நிர்வாகிகள் மட்டும் தவறாது அழைப்பிதழுடன் வருகை தருமாறு வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள.

இரா கோவிந்தராஜ் பி ஏ

மதுக்கரை ஒன்றியம்.

---

கோவை மாநகர் மாவட்டம்

## பேரூர் ஒன்றிய கழக செயல்வீரர்கள் கூட்டம்

இடம்: ஆர் எச். ஆர். பில்டிங் கோவை

நாள்: 5-8-84 ஞாயிறு மாலை 3 மணி

தலைவர்: கே. பி. ராஜி

முன்னிலை: கோவைத்தம்பி எம். எல். ஏ. மாவட்ட அமைப்பாளர்

சிறப்புரை: மாண்புமிகு செ. அரங்கநாயகம் கல்வி அமைச்சர்

திருப்பூர் இரா. மணிமாறன் எம். எல். ஏ. (அரசு கொறடா)

ஒவ்வொரு கிளைக்கழக சார்பு மன்ற நிர்வாகிகள் மட்டும் தவறாது அழைப்பிதழுடன் வருகை தருமாறு வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள

கே. பி. ராஜி

பேரூர் ஒன்றியம்

---

## மீனவர்களுக்கு ரூ 2.20 லட்சம் கடன் உதவி

### விழாவில் அமைச்சர்கள் எஸ். ஆர். ராதா, கலைமணி பங்கேற்பு

சென்னை. ஆக. 3- ஏழை மீனவர்களுக்கு ரூ 2.20 லட்சம் கடன் உதவி அளிக்கப்பட்டது இந்த விழாவில் அமைச்சர்கள் எஸ். ஆர். ராதா, கலைமணி ஆகியோர் கலந்து கொண்டனர்.

திருவொற்றியூர் பட்டினத்தார் கூட்டுறவு மீனவர் சங்கத்தைச் சேர்ந்த 250 பேருக்கு இந்தியன் வங்கி கடனுதவி அளித்தது. கடன் பெற்றவர்களில் 50 பேர் பெண்கள்.

மீன் வளத்துறை அமைச்சர் கலைமணி முன்னிலையில் அமைச்சர் எஸ். ஆர். ராதா கடன் தொகையை வழங்கினார் விழாவுக்கு கே. குப்பன் தலைமை வகித்தார் இந்தியன் வங்கி மேலாளர் தேனப்பன், நிர்வாக இயக்குனர் வள்ளிநாயகம், மண்டலமேலாளர் எம். எஸ், கந்தப்பன் ஆகியோர் பேசினர்.

அமைச்சர் கலைமணி பேசுகையில் கூறியதாவது:-

1969 ல் 14 வங்கிகளை பிரதமர் இந்திரா நாட்டுடமை ஆக்கியதைத் தொடர்ந்து வங்கிகளின் சேவை ஏழை எளிய மக்களை எட்டுகிறது மீனவர்களைப்போன்ற ஏழைஎளிய மக்கள் தங்கள் பொருள்களை அடமானம் வைத்து அதிக வட்டி கொடுத்து தொழில் செய்யும் நிலை இருந்து வந்தது.

வங்கிகள் நாட்டுடமையானதால் அடமானம் ஏதும் இன்றி நம்பிக்கையின் பேரில் இது போன்ற கடன் உதவி அளிக்கப்படுகிறது.

கடன் தொகையைப் பெற எந்த அளவுக்கு முயற்சிகளை மேற்கொண்டீர்களோ அதே அளவில் கடனைத் திருப்பி செலுத்தவும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

ஏழை-எளிய மக்களுக்காக முதல்வர் புரட்சித்தலைவர் நல்ல பல திட்டங்களைத் தீட்டி செயல்படுத்துகிறார். மீனவர்கள் கூட்டுறவு சங்கம் அமைத்து அப்படிப்பட்ட சங்கங்களில் சேர்ந்து இது போன்ற உதவிகளைப் பெற்று பலனடைய வேண்டுகிறேன்.

மீனவர் மகளிர் சங்கங்களை அமைக்கவும் ஏற்பாடு செய்தவர் புரட்சித்தலைவராவார். அதன் மூலம் மீனவ மகளிர் நல்ல பயன்களை அடைந்துவருகிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் கலைமணி பேசினார்.

## தெலுங்கு தேச எம். எல். ஏ. மரணம்

ஐதராபாத். ஆக. 3— தெலுங்கு தேச எம். எல். ஏ. ஒருவர் மாரடைப்பால் மரணமானார்.

அவரது பெயர் இ. வாசுதேவன் விசாகபட்டினம் தொகுதியில் இருந்து வெற்றி பெற்றவர். அவரது இறுதிச்சடங்கு விசாக பட்டினத்தில் நடைபெறுகிறது.

## சக்திபைனான்ஸ் ஷேர் விற்பனை

கோவை, ஆக. 3— சக்தி குருப் கம்பெனிகளில் ஒன்றான சக்தி பைனான்ஸ் ஷேர் திரட்ட திட்டமிட்டுள்ளது.

ரூ. 75 லட்சத்துக்கு ஈக்விடி ஷேர்களை விற்க முன் வந்துள்ளது. செப்டம்பர் 10-ம் தேதி இந்த ஷேரை திரட்டுகிறது.

இந்த நிதியாண்டில் 20 சதவிகித ஷேர்களுக்கு டிவிடண்ட் தர முடியும் என்று உறுதி தெரிவித்துள்ளது.

---

## செங்கை மாவட்ட அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் தொழிலாளர் நலக்குழு மற்றும் இணைப்பு சங்கங்களின் அவசர ஆலோசனைக் கூட்டம்

வருகிற 5-8-84 அன்று காலை 10 மணியளவில் பேரவை பொருளாளர் கே. ராஜேந்திரன் தலைமையில் சென்னை மாவட்ட அண்ணா தொழிற்சங்க செயலாளர் வெ மாயன் முன்னிலையில் அண்ணா தொழிற்சங்க பேரவையின் சிறப்பு மாநாடு குறித்த ஆலோசனைக் கூட்டம் தலைமைக் கழகத்தில் நடைபெற இருப்பதால் தொழிலாளர் நலக்குழு மற்றும் இணைப்பு சங்கங்களின நிர்வாகிகள் கலந்து கொண்டு கூட்டத்தை சிறப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இவண்

ஜி. வேல்முருகன் — செயலாளர், செங்கை மாவட்ட அண்ணா தொழிலாளர் நலக்குழு

கே. சுப்பிரமணி — செயலாளர், செங்கை மாவட்ட அண்ணா தொழிற்சங்கம்

சென்னை-14

3-8-84

---

## பூங்காநகர் தொகுதி வட்ட செயலாளர்கள் ஆலோசனைக்கூட்டம்

பொருள் அண்ணா பவளவிழா

கழக கொடியேற்று விழா நிகழ்ச்சி

காலம்: 3-8-84 வெள்ளி மாலை 6 மணி

இடம்: 86, வி வி. கோயில்தெரு சூளை சென்னை-

சென்னைபூங்காநகர் தொகுதி வட்ட செயலாளர்கள்-கழக முன்னணியினர் ஆலோசனைக்கூட்டம் மேலே குறிப்பிட்ட விலாசத்தில்

திரு இ. மதுசூதனன் எம். எல் சி.

தலைமையில் நடைபெறஉள்ளது.

ஆதலால் வட்டசெயலாளர்களும், அழைப்பிதழ் பெற்றுள்ள கழக முன்னணியினரும் தவறாமல் கலந்து கொண்டு அண்ணா பவளவிழா - கழக கொள்கைபரப்புச் செயலாளர் கொடி ஏற்று விழா நிகழ்ச்சி வெற்றி பெறுவதற்கான தங்கள் மேலான ஆலோசனையைக் கூறி ஒத்துழைப்பு நல்க வேண்டும் என பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

இங்ஙனம்

ஜே. குமார்

தொகுதி செயலாளர்

பூங்காநகர் தொகுதி

---

## ஒலிம்பிக்: ஆக்கியில் இந்தியா 3-வது வெற்றி

### 4-3 என்ற கோல் கணக்கில் ஸ்பெயின் அணியை வென்றது

லாஸ்ஏஞ்சலஸ். ஆக. 3- ஒலிம்பிக் ஆக்கியில் இந்திய அணி ஸ்பெயின் அணியை 4-க்கு 3 என்ற கோல்கணக்கில் தோற்கடித்தது இந்தியாவுக்கு இது 3-வது வெற்றியாகும்.

அமெரிக்காவில் லாஸ் ஏஞ்சலஸ் நகரில் ஒலிம்பிக் போட்டி நடைபெறுவது தெரிந்ததே. ஆக்கி போட்டியில் நேற்று இந்திய அணிக்கும், ஸ்பெயின் அணிக்கும் இடையே போட்டி நடந்தது.

இந்தப்போட்டி ஆரம்பம் முதலே விறுவிறுப்பாக இருந்தது. இந்திய அணியினர் விறுவிறுப்பாக ஆடி ஸ்பெயின அணியினரை திக்குமுக்காடச் செய்தனர்.

ஆட்டம் துவக்கி 11 வது நிமிடம் இந்திய அணியின் அர்தீப் சிங் ஒரு கோல் போட்டார். 19 வது நிமிடம், மெர்லின் பெர்னாண்டஸ் மற்றொரு கோலைப் போட்டார்.

இடைவேளைக்குப்பிறகு உஹீதும், மீண்டும் மெர்லினும் கோல்களைபோட்டு கோல் கணக்கை 4 ஆக்கினர்

இடைவேளைக்குப் பிறகு ஸ்பெயின் அணியினர் விறுவிறுப்பாக ஆடி 3 கோல்களை போட்டனர்.

இந்திய அணிஏற்கனவே அமெரிக்காவையும் மலேஷியாவையும் தோற்கடித்தது நினைவிருக்கலாம்.

---

நெல்லை மாவட்ட

## இளைஞர் அணி செயலாளருக்கு பாராட்டு விழா

திருநெல்வேலி, ஆக. 3- நெல்லை மாவட்ட இளைஞர் அணி செயலாளர் க. அறிவரசனுக்கு பாராட்டு விழாவும் கழக பொதுக்கூட்டமும் சுப்பிரமணியாபுரம் காலனி (தெற்கு அம்பலா மடம்) அண்ணா திடலில் 5-ந்தேதி இரவு 7மணிக்கு நடக்கிறது.

விழாவுக்கு ஏ. பால்ராஜ் தலைமை வகிக்கிறார். கே. பாண்டியன் முன்னிலையில் வி. எஸ். வெங்கடேசன் வரவேற்று பேசுகிறார்.

செல்வி வளர்மதி (மதுரை) கே. கே. எஸ். எஸ். ஆர். இராமச்சந்திரன் எம. எல் ஏ. ஆகியோர் பாராட்டுரை வழங்குவர் வி பாலகிருஷ்ணன் எம். எல் ஏ. கொடி பேற்றி வைக்கிறார். மாவட்ட இளைஞர் அணி செயலாளர் க. அறிவரசன், துணைச் செயலாளர் வய்யாபுரி மற்றும் சிவகாசி சின்னதம்பி ஆகியோர் பாராட்டுபெறுகிறார்கள்.

மற்றும் கே. கே. சாமி, கே. அப்துல்காதர், ஆர். தனுஷ்கோடி, கே. ஏ. ஏ. அசன்பதுருதீன், நீராத்திலிங்கம், கே. வேல்சாமி கே கருப்பசாமி, பி. தர்மர், சி. சின்னசாமி, கே, பாலையாத்தேவர், ஏ. கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் உள்பட பலர் பேசுகிறார்கள் பி. முனியசாமி, பி. சிவசாமி ஆகியோர் நன்றி கூறுவர்.

---

கோவை மாநகர் மாவட்டம்

## கோவை கிழக்குபகுதி செயல்வீரர்கள் கூட்டம்

தலைவர்: இரா. அண்ணா நம்பி

முன்னிலை: சிங்கை கோவிந்தராஜ்

நாள்: 5-8-84 ஞாயிறு காலை 10 மணி

இடம்: வெங்கடேசா திரையரங்கு வரதராசபுரம் கோவை.

சிறப்புரை: மாண்புமிகு செ. அரங்கநாயகம் (கல்வி அமைச்சர்)

திருப்பூர் இரா. மணிமாறன் எம். எல். ஏ (அரசு கொறடா)

திரு. கோவைத்தம்பி எம். எல். ஏ.

ஒவ்வொரு கிளைக்கழக, சார்புமன்ற நிர்வாகிகள் மட்டும் தவறாது அழைப்பிதழுடன் வருகை தருமாறு வேண்டுகிறேன்.

தங்களன்புள்ள

சிங்கை கோவிந்தராஜ்

கோவை மாநகர் மாவட்ட கிழக்குப் பகுதி செயலாளர்

---

கோவை மாநகர் மாவட்டம்

## கோவை மாநகர் மாவட்ட மேற்கு பகுதி செயல்வீரர்கள் கூட்டம்

நாள்:- 5-8-84 ஞாயிறு காலை 10 மணி

இடம்:- மேற்கு தொகுதி கழக அலுவலகம்

தலைவர்:- ஏ. எம். சையதுமுகமது

சிறப்புரை:- மாண்புமிகு செ. அரங்கநாயகம் (கல்வி அமைச்சர்)

திருப்பூர் இரா. மணிமாறன் எம். எல். ஏ. (அரசு கொறடா)

திரு. கோவைத்தம்பி எம். எல். ஏ.

ஒவ்வொரு கிளைக் கழக, சார்புமன்ற நிர்வாகிகள் மட்டும் தவறாது அழைப்பிதழுடன் வருகை தருமாறு வேண்டுகிறேன்.

தங்களன்புள்ள

ஏ. எம். சையதுமுகமது

கோவை மாநகர் மாவட்ட மேற்கு பகுதி செயலாளர்

கடத்தப்பட்ட பிரான்ஸ் நாட்டு

# விமானம் குண்டுவெடித்து தகர்ப்பு

டெஹரான்; ஆக 3- பிராங்க் பர்ட்நகரிலிருந்து பாரிசுக்குதிரும்பும்வழியில் பிரான்ஸ் நாட்டுவிமானம் 50பேருடன் ஈரான் நாட்டின் தலைநகரானடெஹரானுக்கு கடத்திச்செல்லப்பட்டது தெரிந்ததே. பிரான்ஸ் நாட்டில் சிறையில் வைக்கப்பட்டிருக்கும் 5 ஈரானியரை விடுவிக்க வேண்டும் என்ற அவர்களுடைய கோரிக்கையை பிரஞ்சு அரசாங்கம் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டதால் விமானம் குண்டு வைத்துதகர்த்தப்பட்டது.

முன்னதாக விமானக் கடத்தல்காரர்கள் பயணிகளை எல்லாம் விமானம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த இடத்திலிருந்து 200 மீட்டர் தூரத்திற்கு அழைத்து சென்று தரையில் படுத்துக் கொள்ளுமாறு உத்தரவிட்டனர். விமானகடத்தல்காரர்கள் பின்னர் சரண் அடைந்தனர்.

# ராஜிநாமா நாடகம் ஆடிவிட்டு பதவியைத் தேடி ஓடிய கருணாநிதி

## கழக பொதுச்செயலாளர் ப. உ. ச. தாக்கு

முகையூர், ஆகஸ்ட் 3-இலங்கைத்தமிழர்பிரச்சினைக்காக எம். எல். ஏ. பதவியை ராஜிநாமா செய்துவிட்டு 3 மாதத்திற்குள் எம். எல். சி ஆனார். பதவியைத் தேடி ஓடுவது கருணாநிதிதான் என்பது மக்களுக்கு புரிந்துவிட்டது என கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. குற்றஞ்சாட்டினார்.

பேரறிஞர் அண்ணா பவளவிழா பொதுக்கூட்டம் மணலூர் பேட்டை காந்திஜி சிலை அருகில் நகர செயலாளர் எம். சந்திரசேகரன் தலைமையில் நடைபெற்றது. கூட்டம் துவங்கும் முன அண்ணா சிலைக்கு பொதுச் செயலாளா ப. உ. ச. மாலை அணிவித்தார்.

பின்னர் கூடியிருந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில்பொதுச் செயலாளர் ப. உ. ச. பேசினார் தி. மு. க. தலைவர், கருணாநிதி என்னைபதவிக்காககழகத்தில் சேர்ந்தேன், பதவிககாக ஓடியவன் என்று கூறுகிறார்.

ஆனால் இவர் இலங்கை வாழ் தமிழர்களுக்காக சட்டமன்ற உறுப்பினர் பதவியைத் தியாகம் செய்கிறேன் என்றுராஜினாமா செய்து, 3 மாதங்களுக்குள் மீண்டும் மேலவை சட்டமன்ற உறுப்பினர் பதவியை தேடி ஏன் பெற்றார்.

### கருணாநிதி பேசலாமா?

பதவியை தேடி ஓடுவது யார் என மக்களுக்கு நன்றாகப் புரிந்து விட்டது. கழகஅமைச்சர்கள் மீது லஞ்சக் குற்றச்சாட்டுக்களை கூறும் இவர், நான் அமைச்சராக இருந்த போது, என்மீது கூறப்பட்ட அரிசிபேர ஊழலில் நானே என்னை நிரபராது என நீதிபதி ராமபிரசாதராவ்கமிஷன்முன் ஆஜராகி தீர்ப்பைப் பெற்றேன்.

அதே வழியில்இவர்மீது சாட்டப்பட்ட பலவேறு லஞ்ச குற்றச்சாட்டுகளில இவர் குற்றவாளியே என தீர்ப்பளித்த சர்க்காரியா கமிஷன் முன் ஆஜராகி தன்னை நிரபராதி என நிருபிக்கத் தவறியவர்.

மற்றவர்களைப் பற்றி லஞ்ச ஊழல் புரிகிறார்கள என்று பேச இவருக்கு என்ன யோக்யதை உள்ளது.

இந்திய நாட்டின் அனைத்து மாநிலங்களிலும், ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்ட தலைவர் பிரதமர் இந்திராகாந்தி மத்திய வலுவுள்ள ஆட்சியை அமைககக்கூடியவர் இநதிராகாந்தி ஒருவரே. இவ்வாறு ப. உ. ச. கூறினார்.

### தி.மு.கவினர் இணைந்தனர்

பொதுக்கூட்டத்தில் எ. வ, வேலு, முன்னாள் முகையூர் ஒன்றியத் தலைவர் வி. எம். ஜெயராமன், ஒன்றிய செயலர் ஜி. ரகோத்தமன், துணை செயலர் என். தங்கவேல், பொருளாளர் ஆர். சாவித்திரி, வி. ரவி, ஆனையன் முதலியவர்களும் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினார்கள்.

மணலூர்பேட்டை நகரைச் சேர்ந்ததி.மு.க. வில் தீவிரமாக செயல் புரிந்த இளைஞர்கள், தி.மு.க. விலிருந்து விலகி பொதுச் செயலாளர் ப. உ. ச முன்னிலையில் கழகத்தில்இணைந்தனர்.

முகையூர் ஒன்றியத்தை சேர்ந்த தேவனூரில பவளவிழாவைமுன்னிட்டு ஏற்பாடு செய்திருந்த அறிஞர் அண்ணா திரு உருவச்சிலையைப் பொது செயலாளர் திறந்து வைதது சொற்பொழி வாற்றினார்.

விழாவிற்கு அவைத் தலைவர் டி. ஜி. அப்பாவு தலைமை வகித்தார். விழாவிற்கு வருகை தந்த மற்ற கழக நிர்வாகிகளை முகையூர் வி. எம். ஜெயராமன் வரவேற்றுப் பேசினார். தொடர்ந்து மணம்பூண்டியில் முன்னாள் ஒன்றிய செயலர் ம. க. கண்ணன் தலைமையில் பொது செயலாளர், ப. உ. ச. கொடியேற்றிப்பேசினார். ஒன்றியததுன சாரையபபட்டு கிராமத்தில் திர

ளாக கூடியிருந்த கொடியேற்று விழாவிற்கு வி. விஸ்வநாதன் தலைமை வகித்தார் கோபால்சாமி அயில்சாமி, ஜிஏகாம்பரம், வி. காந்தி, டி தெய்வீகன் முன்னிலையில் பொதுச் செயலாளர் ப உ ச கொடி யேற்றி வைத்தார்.

# என்.டி. ராமாராவ் அடுத்த வாரம் நாடுதிரும்புகிறார்

ஐதராபாத், ஆக 3- அமெரிக்காவில் அறுவை சிகிச்சை பெற்றுக் கொண்டு அங்கு ஓய்வு எடுத்து வரும் ஆந்திரா முதல்வர் என. டி. ராமாராவ் அடுத்த வாரம் நாடு திரும்புகிறார்.

ஐதராபாத்தில் நடைபெறும் சுதந்தரதின விழா அணிவகுப்பில் என். டி. ராமாராவ் கலநதுகொள்ள இருக்கிறார்.

# உணவு தானிய உற்பத்தி-கொள்முதல் பொதுவிநியோகத்தில் இந்தியாவிலேயேசிறந்து விளங்கும் தமிழ்நாடு

## மத்திய அமைச்சர் பகவத்ஜா ஆசாத் பாராட்டு

சென்னை, ஆக 3 உணவுதானிய உற்பத்தி கொள்முதல் பொது வினியோகம் ஆகியவற்றில் தமிழ்நாடு இந்தியாவிலேயே சிறப்பான முறையில் சாதனையை ஏற்படுத்தியிருக்கிறது என்று மத்திய உணவு மற்றும் உணவுப்பொருள் வழங்கு துறை அமைச்சர் பகவத்ஜா ஆசாத் பாராட்டு தெரிவித்தார்

மத்தியஅமைச்சர்பகவத்ஜா ஆஜாத் சென்னையில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

இதுவரை எந்த ஆண்டிலும் இல்லாத அளவுக்கு இந்தியாவில் 15 கோடியே 30 லட்சம் டன் உணவு தானியம் உற்பத்தியாகியிருக்கிறது. உணவுப் பொருள் கொள் முதலும் 1 கோடியே 62 லட்சம் டன் அளவை எட்டியிருக்கிறது உணவுப் பொருள் கையிருப்பும் கடந்த ஜூலைகணக்குப் படி 1கோடியே 20லட்சம் டன்னாகி இருக்கிறது.

கடந்த ஆண்டில் உணவு தானிய உற்பத்தி 12 கோடியே 80 லட்சம் டன்கள் தான் கொள் முதலும் 1 கோடியே 54லட்சம்டன் ஆகும் இது ஒரு மகத்தான சாதனை என்றே சொல்ல வேண்டும்.

கடந்த 3 ஆண்டுகளாக தொடர்ந்து வறட்சி, வெள்ளம் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டிருந்தும் இந்த ஆண்டு தமிழகம் 1 லட்சம் டன் அரிசியை மத்திய தொகுப்புக்கு கொடுக்க முன்வந்துள்ளது இதற்காக தமிழ்நாடுஅரசைநான் பாராட்டுகிறேன் மத்திய அரசின் நிலைமைகளை தமிழக அரசு நன்கு புரிந்து வைத்திருக்கிறது. தமிழகத்தின் தேவைகளையும் மத்திய அரசு உணர்ந்துள்ளது. உணவுப்பொருள அனுப்பி வைப்பதில் மத்தியஅரசுக்கும் தமிழகத்துக்கும் எந்த விதமான பிரச்சினையும் ஏற்பட வாய்ப்பில்லை.

### சபாஷ் தமிழ்நாடு

இந்த ஆண்டில் தமிழகம் 44 லட்சம் டன் அரிசியை உற்பத்தி செய்துள்ளது. கடந்த ஆண்டை விட இது 32 லட்சம்டன் அதிகமாகும். இந்தஆண்டுதமிழ்நாடு 6 லட்சதது 84 ஆயிரம் டன் அரிசியைகொள்முதல்செய்துள்ளது.

உணவுத் தானிய உற்பத்தியலும் அவற்றை கொள்முதல் செய்வதிலும் நியாய விலைக்கடைகள் மூலம் பொதுமக்களுக்கு வினியோகம் செய்வதிலும் தமிழகம்சிறப்பான முறையில் சாதனையை ஏற்படுத்தியிருக்கிறது. அதற்காக நான் தமிழ் நாடு அரசைபாராட்டக்கடமைபட்டுள்ளேன். பொது வினியோகம் இந்தியாவிலேயே தமிழ்நாட்டில்தான் சிறப்பாக முறையில்அமைந்துள்ளது. தமிழக அரசுக்கு என்னுடைய நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேற்கு வங்கம்-கேரளா முதலிய மாநிலங்கள் பற்றாக்குறை மாநிலங்கள் ஆகும். இப்படிப்பட்ட மாநிலங்களை கருத்தில் கொண்டு உணவுப் பொருள்கள் இதர மாநிலங்களுக்கு வழங்கப்படுகின்றன.

கடந்த ஆண்டுகளில் தென் மாநிலங்களில் சர்க்கரை உற்பத்தி குறைந்துவிட்டது. ஆகவ தான் 3 லட்சத்து 50 ஆயிரம் டன் சர்க்கரை இறக்குமதிசெய்ய நேரிட்

5-ம் பத்தி பார்க்க

(8-ம் பத்திதொடர்ச்சி)

டது சர்க்கரை விலை உயராமல் கட்டுப்பாட்டில வைப்பதற்கு, தேவையானால் மேலும் அதிக அளவில் சர்க்கரைஇறக்குமதி செய்ய அரசு தயங்காது.

பொது வினியோகத்துக்குகூடுதலான அளவில் சோயாபீனஸ் எண்ணெய் கிடைககச் செய்யும்நோககத்துடனமத்தியப்ரதேசத்தில் சோயா பீனஸ் எண்ணெய் உற்பத்தி வளாகம் ஒன்று அமைககப்படவிருக்கிறது.

பொதுவாக அரிசியையே சாப்பிடும் பழக்கததையும் மக்கள் கொஞ்சம் மாற்றிக் கொளள வேண்டும் அதற்குப் பதிலாக கோதுமை போன்றஉணவுப்பொருள்களை அதிக அளவில்உபயோகிகக பழகிக் கொள்ள வேண்டும்.

தற்போது உணவுப் பொருள் கையிருப்பு நன்றாகவே இருக்கிறது. வரும் டிசம்பர் வரை தமிழ்நாட்டில தட்டுப்பாடு எதுவும் ஏற்பட வாய்ப்பில்லை.

இவ்வாறு அமைச்சர் பகவத் ஜா ஆசாத் கூறினார்.

## மத்திய அமைச்சரவையில் மாற்றம்

# எஸ். பி. சவான் பாதுகாப்புத்துறை அமைச்சராகநியமனம்

புதுடெல்லி, ஆக. 3— மத்திய அமைச்சர்களின் இலாகா மாறுதல் செய்யப்பட்டுள்ளது. பாதுகாப்புத்துறை அமைச்சராக எஸ்.பி. சவான் நியமிக்கப்பட்டு இருக்கிறார்.

மத்திய அமைச்சரவையில் கடந்த இருவாரங்களில் இரண்டு தடவை இலாகாமாறுதல் செய்யப்பட்டுள்ளது.

ஜூலை 19-ந் தேதி நடந்த இலாகா மாற்றத்தின் போது பிரதமர் இந்திராகாந்தி வெளியுறவு இலாகாவை தன்னிடம் வைத்துக்கொண்டு வெளியுறவு இலாகா அமைச்சராக இருந்த பிவி நரசிமமராவை உள்துறை அமைச்சராக்கினார் உள துறை அமைச்சராக இருந்த பி. சி. சேத்தி, திட்ட அமைச்சரானார். அது முதல் திட்ட அமைச்சராக இருந்த எஸ்பி சவான் இலாகா இல்லாத அமைச்சராக இருந்து வந்தார்.

பிரதமர் இந்திராகாந்தி நேற்று மீண்டும் மததிய அமைச்சரவையில் இலாகாமாறுதல செய்தார்.

பாதுகாப்பு அமைச்சராக இருந்து வந்த ஆர். வெங்கட்ராமன் துணை ஜனாதிபதி தேர்தலில போட்டியிடுவதால் அமைச்சர் பதவியை ராஜினாமா செய்து விட்டார். இப்போது பாதுகாப்பு அமைச்சராக எஸ் பி. சவான்நியமிக்கப்பட்டு இருக்கிறார்.

### மாற்றங்கள் விவரம்

பாசன இணை அமைச்சராக இருந்தராம நிவாஸ்மிர்தா, வெளியுறவு இணை அமைசசராக நியமிக்கப்பட்டார்.

இவர் 2-வது இணை அமைச்சராக செயல்படுவார், (ஏற்கனவே எ.ஏ. ரகீம் வெளியுறவு அமைச்சராக இருந்து வருகிறார்.)

திட்ட அமைச்சராக இருந்து வரும் பி.சி. சேதது கூடுதல் பாசன இலாகா பொறுப்பையும தற்காலிகமாக கவனித்து வருவார்.

கிராமப்புற வளர்ச்சி அமைச்சராக இருந்து வந்த அரிநாத்மிஸ்ரா சேத்திக்கு உதவியாக பாசன அமைச்சராக்கப்பட்டார்.

### திவாரிக்கு பதிலாக...

சுகாதாரம் மற்றும் குடும்பநலத்திட்ட இணை அமைச்சராக இருந்த திருமதி மோசினா கித்வாய், கிராமப்புற வளர்ச்சிஅமைச்சரானார்.

தொழிலமைச்சராக இருந்த என். டி. திவாரி உத்தரப்பிரதேச முதல்வராக பதவி ஏற்கப்போவதால் தொழிலமைச்சர் பதவியை ராஜினாமாச் செய்து விட்டார் அந்த பதவிக்கு யாரும் நியமிக்கப்படாமல் இன்னும் காலியாக இருக்கிறது.

அந்த இடத்தில் உத்தரப்பிரதேச முதல்வராக இருந்த ஸ்ரீபத் மிஸ்ராவை நியமிக்கலாமா என்று பிரதமர் இந்திரா காந்தி யோசித்து வருகிறார்.

# குடியாத்தத்தில் கழகக் கூட்டம்

குடியாத்தம், ஆக 3. குடியாத்தம் அழகு பெருமாள் ரோடு. பலமனேர்ரோடில் அண்ணா பவளவிழாவும், கழகக் கொடியேற்று விழாவும் நாளை (4-ந் தேதி) மாலை 5 மணிக்கு எஸ். ஏ. மதனகேசரி தலைமையில் நடைபெறுகிறது.

கூட்டத்தில் அமைச்சர் எஸ். ஆர். ராதா, குடிநீர் வடிகால வாரியத தலைவர் ஏ எம் ரகுநாதன், மு. க. மெய்ஞானம், எம். ஜி. உதயம், ஏ ஆர். ராமலிங்கம், சி. மாரககபந்து ஜெயப்பிரகாஷ், கோ. வெங்கடேசன், எஸ். பி. அக்பர் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

கோழி வளர்ப்பு வாரியத் தலைவர்

# கல்யாணி ராமசாமி வெளிநாடு பயணம்

சென்னை, ஆக. 3— தமிழ்நாடு கோழிவளர்ப்பு நிறுவனத்தின் தலைவர் கல்யாணி ராமசாமி கோலாலம்பூர் செல்கிறார்.

நாளை (4-ந் தேதி) காலை 10 மணிக்கு சென்னையிலிருந்து விமானம் மூலம் கோலாலம்பூர் செல்லும் அவர், 8 ந் தேதி வரை "கோழி வளர்ப்பு மற்றும் கோழி இறைச்சி பற்றி கண்காட்சியிலும் அவர் பங்கேற்கிறார்.

கல்யாணி ராமசாமியுடன் நிர்வாக இயக்குனர் ஷீலாராணி செல்கிறார்.

# புதுவையில் தி.மு.க.வினர் வன்முறை

புதுவை, ஆக. 3— ஆங்கிலோ-பிரெஞ்ச் டெக்ஸ்டைல்ஸ் மில்லில் பணிபுரியும் தி.மு.க. உள்பட பல்வேறு கட்சிகளை சேர்ந்த சுமார் 500 தொழிலாளர்கள் ஊர்வலம் போனார்கள்.

மில்லை அரசே ஏற்று நடத்தவேண்டும் தொழிலாளர்களுக்கு இடைக்கால நிவாரண உதவி அளிக்கவேண்டும் என்று வற்புறுத்தி அவர்கள் ஊர்வலம் போனார்கள்.

அப்போது இந்தியன் ஓவர்சிஸ் வங்கியின் முக்கிய கிளை வழியாகச் சென்ற ஊர்வலத்தினர் வங்கி மீது சரமாரியாக கல்வீசினர் அதில் வங்கியின் பெயர்ப் பலகை நொறுங்கியது.

குமரிமாவட்டத்தில்

# ஒன்றிய கழக கூட்டங்கள்

நாகர்கோவில், ஆக. 3. குமரி மாவட்டத்தில் அண்ணா பவள விழாவை சிறப்பாக கொண்டாடுவது பற்றி ஆலோசிக்க முஞ்சிறை ஒன்றியம், கிள்ளியூர் ஒன்றியம் ஆகியவற்றில் கழக செயல்வீரர்கள் கூட்டம் நடந்தது.

முஞ்சிறை ஒன்றிய கழக செயல்வீரர்கள் கூட்டம் புதுக்கடையில் ஒன்றிய அவைத் தலைவர் தவசிமுத்து தலைமையில் மாவட்ட கழக மன்ற செயலாளர் தமிழ்மகன் உசேன் முன்னிலையில் நடைபெற்றது. ஒன்றிய செயலாளர் பீட்டர் வரவேற்று பேசினார். கூட்டத்தில் அனந்த கிருஷ்ணன், வேலப்பன், வெங்கடேசன் ஆசாரி, ஒன்றிய துணை செயலாளர் ஆன்றனிபாபு ஏ பீட்டர், ஜமாலுத்தீன், நம்பாளி முகம்மது, நடைக்காவு ரசமணி வத்சலா, ரோஸ் ஆகியோர் பேசினர். மிக்கேல் அடிமை நன்றி கூறினார்.

கிள்ளியூர் ஒன்றிய கழக செயல்வீரர்கள் கூட்டம் ஒன்றிய அவைத் தலைவர் பாலசந்திரன் தம்பி தலைமையில் மாவட்ட கழக மன்ற செயலாளர் தமிழ்மகன் உசேன் முன்னிலையில் நடந்தது. ஒன்றிய செயலாளர் எஸ். தங்கமணி வரவேற்றார், கூட்டத்தில் அருள்தாஸ், பரியசிசுகுமார், மோகன் யாபாலூர் செல்வராஜ், ஏசுநேசன், மாவட்ட மன்ற தலைவர் பன்னீர்செல்வம் ஆகியோர் பேசினர். மாவட்ட செயலாளர் தமிழ்மகன் உசேன் விளக்க உரையாற்றினார். ஆர். எஸ். ராதாகிருஷ்ணன் நன்றி கூறுவார்.

# லக்கிவீக்லி-சிக்கிம் லாட்டரி முடிவுகள்

## லக்கி வீக்லி

புதுடெல்லி, ஆக. 3- லக்கி வீக்லி லாட்டரியின் 79-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
எம் 291752

இதே எண்கள் உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு.

2 வது பரிசு
தலா ரூ 20 ஆயிரம்
எம் 629983 எ... 195282
ஒ 594412

3-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
எம் 480556 என் 459906
ஒ 169478

(கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

4-வது பரிசு
தலா ரூ. 500
01223 46864 24326
57686 36047 67086
41671 69310 43044
85998

5-வது பரிசு
தலா ரூ. 500
0499 3060 0603 4267
2152 4442 2715 4499
6681 6572

6-வது பரிசு
தலா ரூ 20
0120 4866 1762 5192
2216 6226 2764 6990
4613 8308

7-வது பரிசு
தலா ரூ. 10
014 193 261 361 4[illegible]8
551 663 726 832 972

8-வது பரிசு
தலா ரூ. 5
066 097 125 152 204
238 340 370 410 474
583 586 621 683 776
785 803 857 911 933

விற்பனையாளர் பரிசு
(ரூ 5) 62

## சிக்கிம்

சிக்கிம் லாட்டரியின் 206-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
தலா ரூ 1 லட்சம்
எக்ஸ் 628185
ஒய் 391494
இசெட் 292699

ஆறுதல் பரிசு
தலா ரூ 1000
எக்ஸ் 91494 292699
ஒய் 628485 292699
இசெட் 628485 391494

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
எக்ஸ் 626336
ஒய் 288571
இசெட் 407034

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு

3-வது பரிசு
தலா ரூ 1000
60792 39846 55171
38191 06325 14791
93527 12005 33745
21610

4 வது பரிசு
தலா ரூ. 100
7409 4274 6252 0815
5586 4393 2879 7441
6440 4222

5-வது பரிசு
தலா ரூ 50
1202 2720 0062 1145
0289 2080 0676 4938
9171 2172

6-வது பரிசு
தலா ரூ 20
5500 2981 4644 6541
6081 005[illegible] 7238 6172
3559 1215 0376 [illegible]408
1592 5687 9206 4701
8511 9873 9037 5875

7-வது பரிசு
தலா ரூ. 10
001 208

ஏஜெண்டுகள் பரிசு
ரூ 50 6485

## கணேஷ்

கணேஷ் லாட்டரியின் 29 வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
ஜிஏ 946127

இதே எண்கள் உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 1000 உண்டு

2 வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
ஜிஏ 823184
ஜிபி 584 78
ஜிசி 895521

கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு

3 வது பரிசு
ரூ 500
461207

4 வது பரிசு
ரூ 100 6127

5-வது பரிசு
ரூ. 20 127

6-வது பரிசு
ரூ. 10 27

7 வது பரிசு
ரூ 4 7

## காமதேனு

டெல்லி காமதேனு லாட்டரியின் 259-வது குலுக்கல் நேற்று நடந்தது முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 1½ லட்சம்
கேடிபி 582579

இதே எண்கள் உடைய எல்லா வரிசை சீட்டுகளுக்கும் ஆறுதல் பரிசு தலா ரூ. 1000 உண்டு

2 வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
கேடி இசெட் 466627
498554
கேடி ஏ 250212 713592
கேடி பி 254578 562274

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3- வது பரிசு
தலா ரூ 1000
42363 62087 66188
87755 24385 62445
03518 92558 55103
29770

4-வது பரிசு
தலா ரூ 100
7354 2885 5534 1283
9272 7575 9213 9575
8422 3967

5-வது பரிசு
தலா ரூ. 50
5615 6385 0827 6910
7094 2101 4366 7322
6352 2867

6-வது பரிசு
தலா ரூ 20
2150 7104 6838 3954
4554 3825 6305 5707
6103 2424 5866 4977
3824 6397 8935 3375
7905 4451 3566 7256

7-வது பரிசு
தலா ரூ 10
731 031 250 273
495 737

# லாரி மோதி வாலிபர் சாவு

சென்னை, ஆக. 2— சென்னை தியாகராய நகர் கிரிரோடில் வசிப்பவர் காசி (வயது 27) இவர் கிண்டியில் ஒரு நிறுவனத்தில் வேலைபார்த்துவருகிறார் நேற்று இரவு காசியும் அவரது நண்பர் ராஜூவும் சைக்கிளில் வந்தனர்.

சைதாப்பேட்டையில் அவர்கள் வந்து கொண்டிருந்தபோது எதிரேவந்த லாரி மோதியதில் காசி அந்த இடத்திலேயே இறந்தார் ராஜூ உயிர் தப்பினர்.

இதையடுத்து கிண்டி போலீசார் லாரி டிரைவர் முருகேசனை கைது செய்து விசாரித்து வருகிறார்கள்.

# மூக்கை அறுத்த இருவர் கைது

சென்னை. ஜூலை 2— நுங்கம்பாக்கத்தில் உள்ள ஒரு ஓட்டலில் சாப்பிடச் சென்றவர்கட்கும் ஓட்டல் ஊழியர்கட்கும் நேற்று இரவு சண்டை நடந்தது.

கிளாஸ் ஒன்று உடைந்ததை ஒட்டி தகராறு ஏற்பட்டது.

இதில் நாராயணன் என்பவரது மூக்கை ஓட்டல் ஊழியர் ஒருவர் உடைந்த கிளாசால அறுத்தாராம்.

ரவி என்பவருக்கும் காயம் ஏற்பட்டது. இவர்கள் இருவரும் அரசு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர். மேலும் மூவர் காயம் அடைந்தனர்.

இதன் தொடர்பாக ஓட்டல் ஊழியர்கள் இப்ராகிம், விக்டர் ஆகிய இருவர் கைது செய்யப்பட்டனர்.

# வாலிகண்டபுரத்தில் நடை பயண குழுவிற்கு வரவேற்பு

வாலிகண்டபுரம், ஆக 3- அண்ணா பவள விழா, புரட்சித்தலைவர் அரசின் சாதனை விளக்க நடை பயணக் குழுவினர் வாலிகண்டபுரம் வந்தபோது அவர்களுக்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

டி. பி. மனோகரன் தலைமையில் வந்த இக்குழுவினரை வழி நெடுக கழகத் தோழர்கள் வரவேற்றனர்.

ஆங்காங்கே, நடை பயணக் குழுவினர் கழக அரசின் சாதனைகளை விளக்கிக் கூறினர்.

அதைத்தொடர்ந்து தொழுதூர், ஆவட்டி கைகாட்டி, வேப்பூர் வழியாக உளுந்தூர் பேட்டைக்கு நடை பயண குழுவினர் வந்தனர். அங்கு அவர்களுக்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

நாகபுரியில்

# நகை திருட்டு: சென்னையில் தம்பதி கைது

சென்னை, ஆக. 3- பூக்கடை பகுதியில் சந்தேகப்படும்படி சுற்றிக் கொண்டு இருந்த தம்பதிகளை போலீசார் விசாரித்ததில் அவர்களிடமிருந்து 12 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள தங்கம் வெள்ளி நகைகள் சிக்கின இது பற்றி விவரம் வருமாறு:-

கள்ளக்குறிச்சியை சேர்ந்தவர் ராஜி என்ற கலியன் (வயது 36) இவருடைய மனைவி பெயர் லட்சுமி (வயது 33) சம்பவ தினத்தன்று இவர்கள் இருவரும் சென்னை பூக்கடை பகுதியில் சுற்றி கொண்டிருந்தார்கள்.

அப்போது அந்த வழியாக வந்த பூக்கடை குற்றப்பிரிவு போலீஸ் இன்ஸ்பெக்டர் செல்வராஜ் சந்தேகத்தின் பேரில் அவர்களை தடுத்து நிறுத்தி விசாரித்தார்.

விசாரணையில் அவர்களிடமிருந்து 12 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள தங்கம் மற்றும் வெள்ளி நகைகள் சிக்கின.

அந்த நகைகளை நாகபுரியில் திருடியதாக அவர்கள் ஒப்புக்கொண்டனர்.

கள்ளக்குறிச்சியில் அவர்கள் இருவரும் ஏற்கனவே பல குற்றங்களுக்காக கைதானவர்கள் என்பதும் விசாரணையில் தெரிந்தது

போலீசார் மேலும் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

# காமராஜர், ராஜாஜி நினைவாலயம்: அழகுபடுத்த அரசு நடவடிக்கை

சென்னை, ஆக. 3 – பெருந்தலைவர் காமராஜர், மூதறிஞர் ராஜாஜி ஆகியோருக்கு அமைக்கப்பட்டுள்ள நினைவாலயங்களை அழகுபடுத்த அரசு நடவடிக்கை எடுத்துள்ளது.

கிண்டியில் உள்ள இருநினைவாலயங்களுக்கு செய்தி மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் ஆர் எம் வீ. சென்று பார்வையிட்டார்.

அமைச்சருடன் செய்தித்துறை இயக்குனர் கிருஷ்ணபாரதி பொதுப்பணித்துறை அதிகாரிகள் ஆகியோர் சென்றனர்.

நினைவாலயங்களைச் சுற்றி நல்ல முறையில் புல்வெளிகள் பூங்காக்கள் அமைக்க ஏற்பாடு செய்யுமாறு அதிகாரிகளுக்கு அமைச்சர் ஆர். எம். வீ. உத்தரவிட்டார். நினைவாலயங்களை நல்ல முறையில் பராமரித்து அழகு படுத்த ஆவன செய்யுமாறு அதிகாரிகளிடம் அமைச்சர் கூறினார்.

# நமது மேடை...

## பழலூர்

பழலூரில் கழக அரசின் சாதனை விளக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது சோமாஸ்சந்தன் தலைமையில அமைச்சர் யூசுப், சட்டமன்ற உறுப்பினர் முத்துராமலிங்கம் டி தங்கராஜ், சிம்சன் சங்கரமூர்த்தி, பாக்கியம், சுப்பையா, பாக்கியநாதன் ஆகியோர் பேசினர்.

## நெல்லை

வள்ளியூர் பிள்ளையார் குடியிருப்பில் கழகச் செயலாளர் நவமணி தலைமையில் முத்துகிருஷ்ணன் முன்னிலையில கழகப்பொதுக் கூட்டம் நடைபெற்றது. அமைச்சர் யூசுப், முத்து ராமலிங்கம் எம்.எல.ஏ., டி தங்கராஜ், பி தங்கவேலு, காஜா மொய்தீன், எம் அய்யாத்துரை, செல்வராஜ் ஆகியோர் பேசினர்

## நெல்லை

நெல்லை மாவட்டம் வள்ளியூர் ஒன்றியத்தைச் சேர்ந்த காவல் கிணற்றில் கழக அரசின சாதனை விளக்கப் பொதுக் கூட்டம் நடைபெற்றது சிலுவை அந்தோணி தலைமையில் மதுரை செல்வி வளர்மதி, சங்கரன், ராகவன் அறிவழகன், டி. தங்கராஜ் லிங்கசாமி, ரத்தினம், ஆகியோர் பேசினர். செல்லத்துரை நன்றி கூறினார்.

நெல்லை மாவட்டம் வள்ளியூர் ஒன்றியத்தைச் சேர்ந்தவடககன்குளத்தில் கழக அரசு சாதனை விளக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கஸ்பார் தலைமையில் டி ராஜப்பா வரவேற்றார் மதுரை செல்வி வளர்மதி, வள்ளியூர் ராகவன், வடலிவிளை அறிவழகன், டி. தங்கராஜ் அ. தாமஸ், தேவதாஸ் சங்கரன் ஆகியோர் பேசினார்.

சென்னையில்

# கழககொடிகளை அறுந்து தி.மு.க.வினர் வன்முறை

சென்னை, ஆக, 3 சென்னை 68, வது வட்டம் செல்லப்பா முதல் தெரு முனையில், கழகக்கொடிகளை தி.மு.க. குண்டர்கள் கிழித்து கொடிமரங்களை வெட்டியுள்ளனர்.

நள்ளிரவு நேரத்தில், இந்தஅடாத செய்கையில் ஈடுபட்டுள்ளனர். இச்சம்பவம் குறித்து காவல் நிலையத்தில் புகார் செய்யப்பட்டுள்ளது. இத்தகவலை அங்குள்ள புரட்சித்தலைவர் எம்.ஜி ஆர் மன்ற செயலாளர் மு,ச. இருதயராஜ் தெரிவித்துள்ளார்.

வள்ளியூரில்

# சங்க துவக்க விழா

வள்ளியூர். ஆக 3. நெல்லை மாவட்டம் வள்ளியூர் ஒன்றிய காய்கறி சாகுபடியாளர் கூட்டுறவு சங்கத்தை பணகுடியில் அமைச்சர் யூசுப் துவக்கி வைத்தார். கிருஷ்ண குருசாமி தலைமை வகித்தார் அந்தோணி அடிகளார், டி. தங்கராஜ், பால்சாமி, சையத்யூசுப், கபீர்முகைதீன், கருணாநிதி, எம். புஷ்பராணி, வின்சென்ட் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

# பொன்னேரியில் கழகக் கொடி ஏற்று விழா

சென்னை, ஆக. 3. பொன்னேரியில் மொண்டியம்மன் நகர் மார்க்கெட் அருகில் 5-ந் தேதி மாலை 7 மணிக்கு சக்குபாய் தலைமையில் அமைச்சர் சவுந்தரராசன் சிறப்புரையாற்றுகிறார்.

விழாவில் ஜே. சி. டி. பிரபாகரன் எம்.எல்.ஏ., கழக கொடியேற்றுகிறார் காஞ்சி பன்னீர்செல்வம் கல்வெட்டு திறந்து வைக்கிறார். பா. வளர்மதி, சக்கரபாணி எம்.எல்.ஏ., துரைவேல், தருமதுரை, தத்தை அருள், முனுசாமி ராஜா, லட்சுமி, மாரியப்பன், செல்வராசு, கோவிந்தசாமி, கவிஞா ஆலயசாமி, செல்லதுரை, குருநாதன் மற்றும் பலர் பேசுவர்.

# பேரறிஞா அண்ணா பவள விழா மலர் ஒரு வேண்டுகோள்

பேரறிஞர் அண்ணா அவர்களின் பவளவிழாவினையொட்டி அனைத்திந்திய அண்ணா தி. மு. க. - அறக்கட்டளையின் சார்பில் சிறப்பு மலர் வெளியிட உள்ளோம்.

அண்ணா அவர்களின் அரிய புகைப் படங்கள், ஓவியங்கள், கைப்பட எழுதிய கடிதங்கள் ஆகியவை ஏதேனும் வைத்திருப்போர் உடனடியாக அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்கிறோம்.

தக்க சன்மானத்துடன் அவை திருப்பி அனுப்பப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்

ச. இராமச்சந்திரன்,
(மின் துறையமைச்சர், மலர்க்குழுத்தலைவர்)

முகவரி:
பேரறிஞர் அண்ணா பவள விழா மலர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக சட்டமன்றக் கட்சி அலுவலகம்,
சென்னை - 600 002.



Published And Edited by K. RAVINDRAN on Behalf of Thangamani Publications And Printed by All India Anna D. M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029